# புதையல்

உரி ஷுலெவிட்ஸ்

தமிழில் கிருஷ்ணன்



இசாக்கின்  கனவில் ஒரு

அசரீரி  மூன்று முறை ஒரு

புதையலை பற்றி கூறியது.

“அதில் அவனை தலைநகரம்

சென்று அரண்மனையின்

அருகில் உள்ள  பாலத்தின்

அடியில் தேடி பார்க்க கூறியது”.

முட்டாள்த்தனமான கனவு

என்று தெரிந்தாலும் இசாக்

அதை தேடி புறப்பட்டான்.

அவனுடைய பயணம்

எங்கெல்லாம்  கூட் டி

செல்கிறது, என்ன நடக்கிறது

என்பதை அழகான

படங்களுடன் கைக்கூட்டி

நம்மை கொண்டு செல்கிறது

இந்த கதை புத்தகம்.



# புதையல்

உரி ஷுலெவிட்ஸ்

தமிழில் கிருஷ்ணன்

ஒரு ஊருல இசாக் எனும் மனிதன் இருந்தான்.

அவன் மிகவும் ஏழ்மையில் வாழ்ந்து வந்தான். உண்ண கூட உணவு இல்லாமல் நிறைய இரவு பட்டினிலேயே உறங்கினான்.

அப்படி ஒரு இரவில் தூங்கும் போது அவனுக்கு ஒரு கனவு வந்தது.



இசாக்கின் கனவில் ஒரு அசரீரி மூன்று முறை ஒரு புதையலை பற்றி கூறியது. “அதில் அவனை தலைநகரம் சென்று அரண்மனையின் அருகில் உள்ள பாலத்தின் அடியில் தேடி பார்க்க கூறியது” அவன் விழித்த போது ‘அது ஒரு பொய் கனவு என்று உணர்ந்து அதை மறந்தான். ஆனால் அதே கனவு இரண்டாம் முறையும் தோன்றியது. ஆனால் அதை பெரிதாக யோசிக்கவில்லை.



மூன்றாம் முறை அதே கனவு வந்த போது, இது உண்மையாக இருக்குமோ என்று அவனுக்கு தோன்றலாகியது. அவன் அதை தேடி புறப்பட்டான்.



நடந்துபோகும் வழியில் அங்கும் இங்குமாக யாரேனும் அவனை வண்டியில் ஏற்றிக்கொண்டனர். பெரும்பாலும் அவன் நடந்தே  சென்றான்.



அவன் அடர்ந்த காடுகள் வழியாக நடந்து சென்றான்.



பெரும் மலைகளை கடந்து சென்றான்.



கடைசியாக தலைநகரத்தை அடைந்தான்.

அரண்மனையின் அருகே இருந்த பாலத்தின் அருகே வந்த பொது அங்கு இரவும் பகலும் காவலாளிகள் அதை காத்துக்கொண்டிருப்பதை கண்டான்.

அங்கு புதையலை தேடுவதற்கான தைரியம் அவனுக்கு இல்லை. இருந்தாலும் ஒவ்வொரு காலையும் அந்த பாலத்திற்கு வந்து விடுவான். இரவு வரைக்கும் சுற்றி திரிவான்.



ஒரு நாள் காவலாளிகளின் தலைவன் அவனை கண்டு

இங்கே ஏன் சுற்றி கொண்டிருக்கிறாய் ? என்று கேட்டான்



இசாக் அவன் கண்ட கனவை தலைவனிடம் கூறினான்



அதை கேட்ட தலைவன் ‘ அட பாவி நீ கண்ட பொய் கனவுக்காகவா
இவ்வளவு கால்த்தேய நடந்து வந்தாய் எனஏளனமாக சிரித்தான். மேலு
அவன் கூறினான் “நானும் உன்னை போன்று மடையானாக இருந்தால்
ான் கனவில் வந்த புதையலை தேடி உன் ஊரில் உள்ள இசாக்கின் வீட்
அடுப்பங்கரையில் கீழ் தேடி அலைந்து திரிந்துருப்பேன்”.
அதைகூறிவிட்டு சத்தமாக சிரித்தான்

இசாக்கின் மனம் அதை கேட்டவுடன் நொறுங்கியது. அவன் தலைவனுக்கு வணக்கம் கூறி விட்டு அங்கிருந்து அவன் ஊருக்கு திரும்ப புறப்பட்டான்.



பெரும் மலைகளை கடந்து வந்தான்



அடர்ந்த காடுகளை வழியாக வந்தான்



அங்கும் இங்குமாக யாரேனும் வண்டியில் ஏற்றி கொண்டனர். ஆனால் பெரும்பாலும் அவன் நடந்தே வந்தான்.



கடைசியாக அவன் ஊருக்கு வந்து சேர்ந்தான்.



அவன் வீட்டிற்கு வந்தவுடன் அவன் வீட்டின் அடுப்பங்கரை கீழ் தோண்டினான். அவன் தேடி சென்ற புதையல் அங்கு தான் இருந்தது.



கடவுளுக்கு நன்றிகடனாக ஒரு தேவாலயம் கட்டினான். அங்கு ஒரு மூளையில் உள்ள கல்லில் பொறித்தான்

“தூரம் பயணம் செய்து வந்தாலே அருகில் இருக்கும் புதையல் தெரியவரும்” என்று.

அந்த காவலாளிகளின் தலைவனுக்கு ஒரு விலைமதிப்பில்லா ரூபியை பரிசாக அனுப்பினான். அவனுடைய மீதி வாழ்நாளில் மனநிறைவுடன் வாழ்ந்தான். ஏழ்மை அவனை நெருங்கவே இல்லை.

